113

உ

திருச்சிற்றம்பலம்

# திருநாரையூர்த் தலவரலாறு.



பொல்லாப் பிள்ளையார் சன்னிதி

இஃது

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

24-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகளின் திருவுள்ளத்தின்படி

அச்சிடப்பெற்றது.

1943





திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

**24-வது மகா சந்நிதானம்**

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ சேக்கிழார் சந்தானுசாரியர்கள்

# பிரதிட்டை



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர வாதீனத்து இருபத்துநான்காவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இத்திருநாரையூர்ச் சிவாலயத்திலே சமயாசாரிய சுவாமிகளின் பக்கத்தில், புதிதாகவே கோயில் கட்டுவித்து ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளையும், ஸ்ரீமெய்கண்டதேவர், ஸ்ரீ அருணந்திசிவம், ஸ்ரீ மறைஞான சம்பந்தர், ஸ்ரீ உமாபதிசிவம் என்னும் சந்தானு சாரியர்களையும் பிரதிட்டை செய்வித்தருளி, இத்தல வரலாற்றுப் புத்தகத்தையும் ஆதீனச்செலவில் ஞானசம்பந்தம் பதிப்பகத்தில் அச்சிடுவித் துதவியருளினார்கள்.

தங்கள் ஆதீனத்துக்குச் சொந்தமான சிவத்தலங்களெல்லாவற்றையும் புதுக்கித் திருப்பணி கும்பாபிஷேகம் முதலியன செய்வித்துச் செம்மை

பெறப் பரிபாலனம் செய்தருளுதல்போலவே சைவத் தெய்வத் திருமுறைகள் சைவர்களுக்கு எளிதில் கிடைக்கும் வண்ணம் வெளிப்படுத்தியருளிய ஸ்ரீநம்பியாண்டார் நம்பிகள் அவதரித்தருளிய இத்திருத்தலத்தில் சைவசித்தாந்த ஞான சாத்திரங்களைத் தந்தருளிய சந்தானுசாரிய மூர்த்திகளையும் சேக்கிழார் பெருமானையும் பிரதிட்டை செய்து பிறர்க்கும் வழிகாட்டியருளிய இக் குருமூர்த்திகளின் ஞானப்பெரும் புகழ் ஓங்குக! வெல்க!! வாழ்க !!!



## பொருளடக்கம்


| | |
|---|---|
| தலமும் இருப்பிடமும் | 1 |
| மூர்த்திகள் | 3 |
| தீர்த்தங்கள் | ,, |
| புராணம் | 4 |
| திருக்கோயில்கள் | ,, |
| பிரகார ஆலயங்கள் | 6 |
| திருப்பாடல்கள் | 7 |
| திருப்பணிகள் | 8 |
| இக்காலத் திருப்பணிகள் | 9 |
| காலபூசை, திருவிழா. | 12 |
| நிலவருமானம், திருவாபரணம், வாகனங்கள். | |
| சிறந்த சில சரித்திரங்கள். | 13 |
| கல்வெட்டுக்கள் | 17 |
| திருப்பாடல்கள் | 20 |
| Thirunaraiyur The Home Of Sri Nambi Andar Nambigal | 22 |




திருநாரையூர்க் கோவில் அமைப்பு

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பொல்லாப் பிள்ளையார் துணை

# திருநாரையூர்த் தல வரலாறு



என்னை நினைந்தடிமை கொண்டென் னிடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசுமகிழ் சோலைவிய னாரையூர் முக்கண்
அரசுமகி ழத்திமுகத் தான்.

## தலமும் இருப்பிடமும்

அநாதிமுத்தசித்த சித்துருவாகிய பரமசிவன் அநாதி பெத்தர்களாகிய உயிர்களை உய்யக் கொண்டருளி இறவாத இன்பவெள்ளத் திருத்த வேண்டுமெனத் திருவுளத்து முகிழ்த்தெழுந்த பெருங் கருணையினால் அநாதியில் உலகங்களைப் படைக்கும்போதே மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்று திருமேனி கொண்டருளி, இப்பூவுலகில் சிறந்த பாரதநாடெங்கணும் விளங்கத் திருக் கோயில் கொண்டருளி இங்குள்ளார் செய்யும் வழி பாட்டிற் கேற்பப் போகமும் வீடுந் தந்தருளுகின் றார். அத்தகைய திருத்தலங்களுள்ளே ஓங்குயர் விழுச்சீர்வாய்ந்த காவிரிநதியின் வடகரையில் விளங்கும் தன்னொப்பிலாத சைவத்தலமாகிய

கோயிலென்னும் சிறப்புப் பெயர்பெற்ற சிதம்பரத்தின் தென்மேற்கில் திகழ்வது **திருநாரையூர்** என்னும் திவ்விய திருத்தலம்.

"உலகம் உய்யவும் சைவம் நின்றோங்கவும்' தெய்வத் திருவருளால் அவதாரஞ்செய்து புறச்சமய இருளால் வந்த இடையூறுகளெல்லாவற்றையும் நீக்கிச் சைவ சித்தாந்தப் பேரொளி விளக்கமுறப் பல அற்புதங்களினாலும், தேவாரம் முதலிய சைவத் திருமுறைகளாலும் சைவசமயத்தை நிலைபெறச்செய்த பரமாசாரியர்களாகிய திருஞானசம்பந்த மூர்த்திகள் முதலிய நாயன்மார்கள் அருளிச்செய்த திருமுறைகள் மறைந்திருக்குங் காலத்தில் அவற்றை ஸ்ரீ பொல்லாப் பிள்ளையார் பெருங்கருணையினால் நம்பியாண்டார் நம்பிகள் என்னும் ஆதிசைவ மறைச்சிறிய பெருந்தகையார் வாயிலாக வெளிப்படுத்தி, இன்றும் என்றும் 'திருமுறை' என்று சைவர்கள் பேசிக்கொள்வதற்கும் படிப்பதற்கும் உதவியாய் மிளிர்வது இத்திருநாரையூர் ஒன்றே யாகும்.

இத்தலம் சிதம்பரத்தினின்றும் பத்து மைல் தூரத்துள்ளது. தென்னார்க்காடு ஜில்லா சிதம்பரம் தாலுகாவைச் சேர்ந்தது. இத்தலத்தின் அக்கினி மூலையில் *சிறகிழந்தநல்லூர் என்ற ஓரூர் உண்டு.

* நாரையின் சிறகிழந்த காரணத்தால் அப்பெயர் வந்தது.

## மூர்த்திகள்

இத்திருநாரையூரிற் சிவபெருமான் பொல்லாப் பிள்ளையார் எனவும், சௌந்தரேசர் எனவும், இரு சுயம்புத் திருமேனிகொண் டெழுந்தருளியிருக் கின்றார். பொல்லாப் பிள்ளையார் என்பது பொள் ளாப் பிள்ளையார் என்பதன் மரூஉ. உளியால் செதுக்கப்படாத சுயம்பு மூர்த்தியாதலின் பொள் ளாப் பிள்ளையார் (பொல்லாப் பிள்ளையார்) என வழங்கப்பெற்றார். இத்தலத்தின் சுவாமி பெயர் சௌந்தரேசுவரர், பகேசுவரர், பலாகேசுவரர் முதலியன. அம்பிகை பெயர் சௌந்தரநாயகி, திரிபுரசுந்தரி முதலியன. விநாயகர் பெயர் சுயம்பு விநாயகர், பொல்லாப் பிள்ளையார், சுயம்பிரகாசர் முதலியன. விநாயகப்பெருமானும் சிவபெருமா னும் ஒவ்வொருவரும் தனித்தனி எட்டுத் திருவிளை யாடல்கள் செய்தருளியுள்ளார்கள்.

இத்தலத்தில் இம்மூர்த்திகள் தம்மை விரும்பி வழிபடும் அடியார்களுக்கு எல்லாச் சித்திகளையும் அருள்கின்றனர். இத்தலம் நியமத்தோடு வசித்து வழிபடுவோர்க்குத் தீராத நோய்களையும் தீர்க்கு மென்பது தேவாரத்தாலும், தலபுராணத்தாலும், அநுபவத்தாலும் தெரியக்கூடிய உண்மையாகும்.

## தீர்த்தங்கள்

திருக்கோயிலின் கிழக்கில் காருணிய தீர்த்தம் என்னும் நீலோற்பல தடாகம் உண்டு. அது நாக

தீர்த்தம் எனவும், சிவகங்கை எனவும் வழங்கும். கொள்ளிடம் என்ற தீர்த்தமும் உளது.

## புராணம்

இத்தலத்தின் புராணம் வடமொழியிலும், தமிழ்மொழியிலும் அச்சிடப்பட்டுளது. அது முப்பத்தோரு அத்தியாயங்களையும், ஆயிரத்தெழுநூற்றறுபத்தாறு சுலோகங்களையும் உடையது. தஞ்சாவூர் அரண்மனைப் புத்தகசாலை, கஞ்சனூர் முதலிய இடங்களிலிருந்து மூலப் பிரதிகளைத் தேடிப்பெற்று எழுதுவிக்கப்பட்டது. பகமுனிவர், மார்க்கண்டேயர், அகூபாரன், உலூகமுனிவன், கமடமுனிவன், சித்திரதுய்மன் என்னும் அரசன், நாரைமுனிவன், பாண்டவர்கள், ஏமாங்கன், நாகசுந்தரன், சந்திரசேகரன் முதலியோர் வழிபட்டுச் சிவனருள் பெற்றனர் எனப் புராணங்கூறும். அப்புராணம் எழுவகைச் சைவபேதம் முதலியவற்றையும் விளக்குகின்றது.

## திருக்கோயில்கள்

பொல்லாப் பிள்ளையார் திருவுருவம் தனிக்கர்ப்பக்கிருகத்தில் இருக்கின்றது. மகாமண்டபத்தின் வாயிற்படியின்மேல் விநாயகர் அமுதுண்டவுருவம் கருங்கல்லிற் செதுக்கப்பட்டுளது. நாரை பூசித்த வடிவமும் அதன்பக்கத்திலே இருக்கின்றது. நம்பியாண்டார் நம்பிகளும், இராசராசசோழரும் சிலா

விக்கிரகங்களாக மகாமண்டபத்தி லிருக்கின்றனர். இக்கோயிலில் மேல்விமானம் அர்த்தசந்திர விமானம் எனப்படும். அதில் விநாயகர் அமுதுண்ட கதைச்சித்திரம் சுதையால் செய்யப்பட்டிருக்கின்றது. பொல்லாப்பிள்ளையார், நம்பியாண்டார்நம்பி, இராசராசசோழர் என்னும் மூவருடைய தாமிர (உற்சவ) விக்கிரகங்களும் இருக்கின்றன.

47½ அடி நீளங்கொண்ட ஓட்டுக் கொட்டகையும் உண்டு. இக்கோயில் மற்றைக்கோயில்களில் தென்கிழக்கு மூலையி லிருப்பதுபோலின்றி, சுவாமி கோயிலின் தென் பக்கத்தில் அமைந்துள்ளது.

சௌந்தரேசர் திருக்கோயிலில் கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், சோபான மண்டபம் என நான்கு உள்ளன. அவற்றுள் கர்ப்பக்கிருகத்தில் சௌந்தரேசுவரருடைய திருவுருவமான சிவலிங்கம் இருக்கின்றது. அர்த்தமண்டபத்தில் போகசத்தித் திருவுருவம் இருக்கின்றது. மகாமண்டபத்தில் தாமிர உற்சவ மூர்த்திகள் எல்லாம் உள்ளன. ஷை மண்டபத்தில் வடகிழக்கு மூலையில் கருவூலமுண்டு. சோபான மண்டபத்தின் நடுவில் வடக்கே தெற்கு முகமாக நடராசப்பெருமானது திருக்கோயில் இருக்கின்றது. சௌந்தரேசுவரர் விமானம் அர்த்தசந்திர விமானமே. அதன் கீழ்புறத்தில் நாரை பூசித்தது, காட்சி கொடுத்தது, சுயரூபம் பெற்றது முதலியவற்றைக் குறிக்கும் சித்திரங்கள் சுதையால் செய்யப்பட்டு விளங்குகின்றன.

இவ்விமானத்தின் உச்சியில் இரண்டு கலசங்கள் அமைந்துள்ளன. இவ்வாறு மற்றைக்கோயில்களில் இரண்டில்லை.

## பிராகார ஆலயங்கள்

மேற்கே சுப்பிரமணிய சுவாமி ஆலயமும், வாயுமூலையில் இலக்குமி ஆலயமும் இருக்கின்றன. வடக்குப் பிராகாரத்தில் சௌந்தரேசர் ஆலயத்துக்கு வடபுறம் திருமூலஸ்தானம் எனப்படும் ஆலயம் உண்டு. இதன் தலவிருக்ஷம் புன்னை மரம். அது திருமூலஸ்தானத்துக்கு வடக்கே மதிலோரத்திலிருக்கின்றது. மகாமண்டபத்தின் வடக்கில் சண்டேசுரர் கோயிலிருக்கின்றது. மற்றக் கோயில்களில் உள்ளவாறு அர்த்தமண்டபத்துக்கு நேராக இல்லை. இங்குச் சண்டேசுரர் உருவம் இரண்டு உள்ளன. கீழ்புறக் கோபுரத்தின் வடபாலுள்ள திருமாளிகைப்பத்தி மண்டபத்தில் நவக்கிரகங்கள், சூரியன், வைரவர், முதலிய திருவுருவங்கள் இருக்கின்றன. அதற்கு வடக்கில் நித்திய படித்தர சாமான்களை வைக்கும் அறையும், களஞ்சியமும் உள்ளன. கோபுரத்தின் தெற்கில் உள்ள திருமாளிகைப்பத்தி மண்டபத்தில் வாகனங்கள் வைக்கப்பட்டுள்ளன. அதற்குத்தெற்கில் தென்கிழக்குமூலையில் கருங்கல்லாற் கட்டப்பட்ட மடைப்பள்ளி யுண்டு. அதற்குமேற்கில் சந்தானசாரியர்களுடைய திருவுருவங்கள் புதிதாக ஆலயங்கட்டி

பிரதிஷ்டை செய்யப்பெற்றுள்ளன. அதன் மேல் புறம் நடராஜப் பெருமானுடை சந்நிதிக்கு முன்பு சமயாசாரியர்களுடைய திருவுருவங்கள் உள்ளன. அம்மண்டபத்திலேயே இப்பொழுது சேக்கிழார் சுவாமிகள் திருவுருவம் புதிதாகப் பிரதிஷ்டை செய்யப் பெற்றுள்ளது.

இரண்டாம் பிராகாரம்:— தென்வடல் 204 அடி நீளம். கீழ்மேல் 370 அடி. மதிலின் உயரம் 9 அடி. கிழக்கிலும் மேற்கிலும் திருவாயிற்படி உண்டு. கிழக்குத்திக்கிலிருந்த ஐந்து நிலையுடைய கோபுரம் ஒன்று இடிந்துவிட்டது. அது இருந்த இடத்தில் இப்போது ஒருவாயில் குடவறையாகக் கட்டப்பட்டிருக்கின்றது. இரண்டாம் பிராகாரத்தின் வடகிழக்கில் அம்பிகை கோயில் தெற்குமுகமாக அமைந்துள்ளது. கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், மூன்று பத்திமண்டபம் முன்னமே கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. மூன்று பத்தி மண்டபத்தின் இரண்டு பக்கத்திலும் உள்ள மண்டபம் புதிதாகக் கட்டப்பட்டது. கர்ப்பக்கிருகத்தில் அம்பிகையின் திருவுருவம் மாத்திரம் இருக்கின்றது. மகாமண்டபத்தில் கீழ்புறத்தில் பள்ளியறை இருக்கிறது.

## திருப்பாடல்கள்

திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிய திருப்பதிகங்கள் மூன்றும், திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிய திருப்பதிகங்கள் இரண்டும், நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருநாரையூர் விநாயகர் திருவிரட்டைமணி மாலையும் இத்தலத்துக்கு உள்ளன.

## திருப்பணிகள்.

முற்காலத்தில் திருமுறைகண்ட ராசராச அபய குல சோழமன்னரால் திருப்பணி செய்யப்பட்டது.

1895ஆு (மன்மத வருஷம்) கும்பாபிஷேகம் நடந்திருக்கிறது. சென்றவருஷம் வரையிலும் பரம்பரைத் தருமகர்த்தாவாகிய இவ்வூர் இரா. முத்துக்குமாரப் பிள்ளை அவர்களால் தர்மங்கள் நிர்வாகம் பண்ணப்பட்டு வந்தன. அவர்கள் காலமானபின் ஆறுமாதமாக இப்பொழுது அவர் எழுதிவைத்திருக்கும் உயில்படி, S. சொக்கலிங்கம் பிள்ளையால் தர்மங்கள் நிர்வாகம் பண்ணப்பட்டு வருகின்றன.

நீண்டகாலமாகப் பல சிவநேசச்செல்வர்கள் பல திருப்பணிகள் நடத்திவந்தார்கள். இப்போதும் நடத்திவருகின்றனர். விநாயகர் கோயிலின் முன்புள்ள ஓட்டுக்கொட்டகை, திருமூலநாதர் கோயில், நால்வர் திருத்தளி, நடராஜர் மேல் விமானம், திருமஞ்சனத்துக்குரிய கிணறு, மடைப்பள்ளி என்பவற்றைச் செய்த திருப்பணியாளர்கள் குளக்குடி சுயம்பிரகாசப்பிள்ளை பாட்டனர் பாலசுப்பிரமணியப்பிள்ளையும், முத்துக்குமரப் பிள்ளையும் ஆவார்கள்.

திரிபுரசுந்தரிகோயில் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம் இவைகளைத் திருப்பணிசெய்தவர் காட்டு மன்னார்குடி சின்னப்பண்ணை முத்துக்குமாரப் பிள்ளை அவர்கள், வடிவேற் பிள்ளை அவர்கள் ஆவார்கள். ஷை கோயில் மகாமண்டபம், ஒற்றைப் பத்தி மண்டபம் திருப்பணி செய்தவர்கள் புத்தூர், அம்பலவாணபிள்ளையவர்களாவார்கள்.

## இக்காலத் திருப்பணிகள்

ஆலயத்தின் வெளிமதில் நான்குபக்கமும் செங்கற்பணியால் சுமார் இருபதினாயிரம் (20000) ரூபாய்வரை செலவுசெய்து முடித்தவர் சீகாழி வக்கீல் சொக்கலிங்க முதலியாரும், அவர்கள் புத்திரர் சீநிவாச முதலியாரும் ஆவார்கள்.

ஆதிசைவர்வீடு, நகரவிடுதி, வெள்ளிக்கவசம், மரத்தாலான பெருச்சாளிவாகனம் இவைகளைத் திருப்பணி செய்தவர்கள் காரைக்குடி பள. ராம. இலக்ஷ்மணஞ் செட்டியாரவர்கள். இவர்களே திருப்பணி தொடங்கினவர்கள்.

உள் மதில், உள் இராஜகோபுரம், திருமாளிகைப்பத்தி, இலக்குமிகோயில், தெக்ஷிணமூர்த்தி மண்டபம், தீர்த்தப்படித்துறை முதலியவற்றை, கோட்டையூர் க.வீ.சொ.வீ. அழகப்பசெட்டியாரவர்கள் சுமார் ரூபாய் இருபத்திரண்டாயிரம் (22000) வரையில் திருப்பணி செய்துள்ளார்கள்.

சண்டேசுரர்கோவில் திருப்பணி செய்தவர்கள் காரைக்குடி கு. மெ. சொக்கலிங்கஞ் செட்டியார். மேற்குறித்த க. வீ. சொ. அழகப்பசெட்டியார் அவர்கள் வாங்கி வைத்திருந்த கல்லைக்கொண்டு திருநாரையூர், காலஞ்சென்ற, ரா. முத்துக்குமார பிள்ளை, அவர்கள் குறையான திருப்பணிகளைச் சொந்தப் பணம், ரூ. 3000 வரை செலவுசெய்து முடித்து வைத்தார்கள்.

பல அன்பர்களின் உதவிகொண்டு நடத்திய திருப்பணிகள்:— சௌந்தரேசுர சுவாமி கோயில் மூழுப்பணிக்கும், நடராசர்சபை, நால்வர்மண்டபம் இவைகளின் மண்டபங்களைப் புதுக்கி வர்ணம் வைக்கும் பொருட்டும் ஆடூர் M. இரத்தின சபாபதிப்பிள்ளை அவர்கள் ரூபா. 1500 உதவியுள்ளார்கள்.

திரிபுரசுந்தரிகோயில் கர்ப்பக்கிருகம் அர்த்த மண்டபம் புதுப்பித்து வர்ணம் வைக்க ரூ. 600 வரை உதவியவர்கள்:- காட்டு மன்னார்குடி சின்னப் பண்ணை முத்துக்குமாரபிள்ளை அவர்களின் சந்ததியார்கள் சதாசிவம்பிள்ளை, சோமசுந்தரம்பிள்ளை அவர்கள், வடிவேற்பிள்ளை அவர்கள் சந்ததியார் நடராஜபிள்ளை கலியாண சுந்தரம் பிள்ளை அவர்கள். ஷை அம்மையார் கோயில் ஒருபத்தி மண்டபத்தை மூன்று பத்தி மண்டபமாகக்கட்ட ரூ. 200 பெறுங் கருங்கற்களை இராதா நல்லூர் P. வேணுகோபால் பிள்ளை அவர்கள் அளித்தார்கள்.

பொல்லாப் பிள்ளையார் கோவிலைப் புதுப்பிக் கும்படி குளக்குடி, சுயம்பிரகாசம் பிள்ளை அவர்கள் ரூ. 400 தந்துள்ளார்கள்.

திருநந்திதேவர் மண்டபம் கருங்கல்லாலமைத்து விமானம் செய்யத் துரிஞ்சிக்கொல்லை காலஞ் சென்ற ஞானப்பிரகாசம் பிள்ளை மனைவியார் அலர்மேலுஅம்மாள் ரூபா. 500 கொடுத்தார்கள்.

சுப்பிரமணிய சுவாமிகோயில் திருப்பணி செய் தவர் கானூட்டுமுள்ளூர் ராயப்பிள்ளை அவர்கள். இப்போது புதுப்பித்து வர்ணம் வைக்கப் பணம் உதவியவர்கள் இராதாநல்லூர் வேணுகோபால் பிள்ளை அவர்கள்; ரூ. 300 கொடுத்தார்கள். இவர் கள் ராயப்பிள்ளை அவர்கள் மகளின் புதல்வராவார் கள்.

புதிதாக அமைக்கப்பட்ட கோபுரத்துக்குக் கலசம் 5 வைக்க ரூ. 330 கொடுத்தவர்கள் நாஞ்சி லூர் M. பொன்னம்பலபிள்ளை அவர்கள்.

நம்பியாண்டார் நம்பிக்குத் தனியாக மகா மண் டபத்தில் ஆலயம் அமைத்துப் பிரதிட்டைசெய்ய ரூ. 200–க்குமேல் சொந்தச்செலவில் கொடுத்துவரு கிறவர்கள் ஆடூர் ஆ. சு. கணபதிப்பிள்ளை அவர் கள்.

பள்ளியறையமைக்கப் பணம் உதவியவர்கள் துரிஞ்சல்மேடு நமசிவாயம்பிள்ளை பாரியாள் கல்யாணி அம்மாள் 250 ரூபாய்வரை உதவியுள்ளார்கள்.

## காலபூசை, திருவிழா.

காலசந்தி, உச்சிக்காலம், சாயங்காலம், அர்த்தயாமம் இந்தநான்கு காலங்களிலும் அபிஷேகம் நைவேத்தியம் ஆராதனைகள் நடந்து வருகின்றன. சிலகட்டளைகளுக்கு உதவிசெய்பவர்களுமுண்டு.

வைகாசிமீ விசாகஉற்சவம் பத்து நாளும் நடப்பது வழக்கம். பஞ்சபர்வ உற்சவம் இப்போதும் நடந்துவருகிறது.

## நிலவருமானம். திருவாபரணம், வாகனங்கள்.

சுமார் 400 கலம் நெல் வருவாய்க்கு உரிய நன்செய்நிலமிருக்கிறது.

விநாயகர், சௌந்தரேசுவரர், அம்மை, தண்டபாணியாகிய மூர்த்திகளுக்கு வெள்ளிக் கவசங்களும், உற்சவமூர்த்திகட்கு ரூபாய் 300 பெறக்கூடிய கல்லிழைத்த நகைகளும் இருக்கின்றன.

பஞ்சமூர்த்திகட்கு மரங்களா லமைக்கப்பட்ட வாகனங்களிருக்கின்றன.

## சிறந்த சில சரித்திரங்கள்.

சைவசமயத்துக்கு இன்றியமையாத திருமுறைகள் பன்னிரண்டு. அப்பன்னிரண்டு சைவத்திருமுறைகளும் எந்தக்காலத்தில், எந்தத்தலத்தில், யாரால் யார்கேட்டுக்கொள்ள வெளிவந்தன என்பதற்குரிய விடையில் முன்வந்துநிற்பது இத்திருநாரையூரேயாகும். எவ்வாறெனில் சோழநாட்டு அரசராகிய இராசராச அபயகுலசேகர சோழமகாராசபூபதி யென்பவர் தம்மிடத்தில் வருகின்ற சிவனடியார்கள் சைவ சமய பரமாசாரியர்கள் பாடியருளிய தேவாரப்பதிகங்களில் ஒவ்வொரு பதிகங்களோ பதிகங்களின் இடையிலுள்ள சில அற்புதப் பாடல்களோ சொல்லக் கேட்டு மனங்கரைந்துருகி அத்தேவாரங்கள் முழுவதும் பெறுவதற்கு எங்குந்தேடியும் கிடையாமல் வருந்தியிருந்தனர். சிதம்பரத்துக்குத் தென்மேற்குப் பாகத்தில்உள்ள தலமாகிய இத் திருநாரையூரில் ஆதிசைவமரபில் அநந்தேச சிவாசாரியருக்கு, பொல்லாப்பிள்ளையார் திருவருளால் அவதரித்த



இராசராச அபயகுலசேகரர்

தவப்புதல்வர் சிறந்து வளர்ந்து வருவதைக்கண்டு மகிழ்ச்சியுற்ற தந்தை யாராகிய அநந்தேச சிவா சாரியார் அப்புத்திரனுக்குச் சிவதீக்ஷைகள், கணேசபூசை, சிவலிங்கபூசைகட்குரிய ஆகமக் கிரியைகள் யாவற்றையும் செய்துவைத்தார்.

பின்னொருநாள் அநந்தேசசிவாசாரியார் தமது புத்திரனை அழைத்து "நீ இன்றையதினம் கோயிலுக்குப்போய்க் கணேசப்பெருமானுக்கு அன்போடும் அபிடேகம், அலங்காரம், நைவேத்தியம், ஆராதனைகளெல்லாம் செய்துவா" என்று அனுப்பினர். தந்தையார் அருளியபடி ஆலயஞ்சென்று பொல்லாப் பிள்ளையாருக்குப் பேரன்புடன் அபிஷேகஞ் செய்து அலங்கரித்து நிவேதனம்வைத்து திருவமுது செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார். நிவேதிப்பதைத் திருவமுது செய்தருளாமையைக்கண்ட அக்குழந்தை தாம்செய்த பூசையில் ஏதோ குறையுளது; ஆதலால்தான் உண்டருளவில்லையென்று தமது தலையைக் கருங்கல்லிலே மோதப்போனர். கண்டபிள்ளையார் "பக்தனே! மோதிக்கொள்ள வேண்டாம்" என்று தடுத்து நிவேதனங்களைத் திருவமுது செய்தருளினர். அதைக்கண்டு மகிழ்ந்து அந்த ஆதிசைவத் தவப்புதல்வர் விநாயகப்பிரானைத் துதித்துத் திருவடிகளில்விழுந்து வணங்கி நின்று தேவரீர் அடியேனுக்கு வித்தைகளைக் கற்பித்தருளவேண்டும் எனப்பிரார்த்திக்க கணேசப் பெருமான் அருள் சுரந்து அச்சிறுவருக்குப் பர

ஞானம் அபரஞானமாகிய இருவகை ஞானங்களை யும் அருள்செய்து அவரை முத்தராக்கி "இன்று முதல் உன்பெயர் நம்பியாண்டார்நம்பியென வழங் குக" என அருளினர். இச்செய்தியையறிந்ததந்தை முதலியோர் பெருவியப்பெய்தினர்.



**நம்பியாண்டார் நம்பி**

இவ்வரலாற்றை ராஜராஜ சோழவரசர்கேட்டு வியந்து அச்சமும் அன்புங்கொண்டு தமது நாட் டிலுள்ள அன்பர்களனைவரோடும் வாழை, மா, பலாக்கனிகள், தேங்காய், இளநீர், முதலிய அபி ஷேகத் திரவியங்கள், மோதக முதலிய நைவேத் தியங்கள் எல்லாம் நிறையக்கொண்டுவந்து திரு நாரையூரையடைந்து நம்பியாண்டார் நம்பிகளைக்

கண்டுவணங்கி, சுவாமீ இவையெல்லாவற்றையும் பொல்லாப்பிள்ளையாருக்கு அர்ப்பணஞ்செய்துவிட வேண்டும் என்று விண்ணப்பித்தார். உடனே அவர் விநாயகர் சந்நிதியில்வைத்து நிவேதித்துத் திருவமுது செய்தருளுக என்றுவேண்டினர். பெருமான் திருவமுது செய்தருளினர். அதுகண்ட அரசர்பெருமான் நம்பிகள்பால் அன்பும் அச்சமும் கொண்டு திருஞானசம்பந்தப் பெருமான் முதலிய சமயாசாரியர்கள் அருளிய திருமுறைகளை வெளிப்படுத்தியருளவேண்டுமெனப் பிரார்த்தித்தலும், அவர் நம் கணேசப்பெருமானைக்கேட்டால் அருளும் எனச்சொல்லி அவ்வாறே பெருமான்முன் விண்ணப்பித்து அவர் திருவருளால் தெரிந்து அரசனுக்கறிவுறுத்தி அவன் வேண்டுகோட்படி தில்லை சென்று திருமுறைகளை வெளிப்படுத்தியருளினர்கள். அப்பால் நம்பியாண்டார்நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதி, பொல்லாப்பிள்ளையார் திருவிரட்டைமணிமாலை, முதலியவற்றைப்பாடியருளினர். திருஞானசம்பந்தமூர்த்திக்கு ஆறு பிரபந்தங்களும், திருநாவுக்கரசுமூர்த்திக்கு ஒரு பிரபந்தமும் பாடியருளினர்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் மூன்றும் வயதில் பன்னிரண்டு திருநாமம்பெற்ற கழுமலமாகிய சீகாழியில் பிரமபுரீசர் திருவருளால் பெரிய நாயகியம்மையார் திருமுலைப்பால் பொற்கிண்ணத் திலூட்டியருளினமையால் சிவஞானம் பெற்றூர்

என்ற வரலாற்றையுணர்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள் தில்லைப்பதியில் தரிசித்துக்கொண்டு அங்கப் பிரதக்ஷிணமாக வீதிவலம் செய்துகொண்டு உடனே மேற்கெல்லையைக் கடந்து நின்று நிருத்த தெரிசனஞ் செய்துகொண்டு திருநாரையூருக்குச் சென்று வணங்கிப் பதிகம் பாடியருளிச் சீகாழி சென்றார் என்பது திருத்தொண்டர்புராணவாக்கு. இதனால் விளங்கக் கிடந்தது, நேரே கொள்ளிடக் கரைவழியாகச் செல்லவேண்டியதைவிட்டு மேற்கே சென்று நாலுமைலுக்கப்பால் தெற்கேயுள்ள திருநாரையூருக்குப் போனார் என்றமையால் இத்தலப் பெருமை தெற்றென விளங்குகிறது.

## கல்வெட்டுக்கள்

திருநாரையூர் மிகப் புராதனமான க்ஷேத்திரம். இத்தல சம்பந்தமான கல்வெட்டுக்கள் இப்போது நான்குதான் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுக்கள் கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவை. இக் கல்வெட்டுக்களிலிருந்து திருநாரையூரானது தனியூரான வீரநாராயணசதுர்வேதிமங்கலத்தைச் சேர்ந்துள்ள ஒரு பிடாகையாகும் என்று தெரிகிறது. தனியூர் என்பது தற்கால முனிஸிபாலிடிகளைப்போல ஒரு மாநகரம்.

இந்த வீரநாராயண சதுர்வேதிமங்கலம் என்பது காவேரிக்கு வடகரையிலுள்ள விருதராஜ பயங்கர வளநாட்டைச் சேர்ந்தது. உடையார்குடி.

காட்டுமன்னர் கோயில், திருநாரையூர், லால்பேட் இவ்வூர்களெல்லாம் அம்மாநகரத்தைச் சேர்ந்த வைகள்.

இத்தனியூர்களைச் சபையார் ஆட்சி செய்து வந்தார்கள். ஒவ்வொரு தனியூரும் மாபெரும் ஸ்தல சுய ஆட்சி ஸ்தலமாகும். இறைப்பொருளை வசூலிப்பது, தானதருமங்களைச் செய்வது, வரிக்கூறு செய்வது, வசூலிப்பது, நியாயத்தை வழங்குவது முதலியவைகளை இச்சபையார் நடத்திவந்தனர்.

பராணித்தலைவனான குலோத்துங்க சோழனின் [கி.பி. 1984, (?)] காலத்தில் மூலஸ்தான முடையார் கோயிலுக்குச் சந்தி விளக்கு ஒன்று எரிப்பதற்காக ஓரூர் தானஞ் செய்யப்பட்டது. திருவாய்ப்பாடி ஆழ்வாரான கைலாசமுடையார்க்கு நித்திய நிபந்தத்திற்காக வேண்டிய பொருள் இல்லாமையால் ஆண்டுதோறும் 540 கலம் அதிகப்படி நெல் கொடுக்கக்கூடிய நிலதானம் ஒன்று உலாப்பெற்ற விக்கிரம சோழனின் மூன்றுமாண்டில் செய்விக்கப் பட்டதாக மற்றோர் சாசனம் கூறுகிறது. திருவாய்ப்பாடி என்பது கொள்ளிடத்தின் தென் கரையிலுள்ள ஊர்போலும். ஒருகோயிலின் சாசனத்தை மற்றோர் கோயிலில் பொறிப்பது அக்கால வழக்காகும். இத்திருவாய்ப்பாடி சம்பந்தமான இக்கல் வெட்டு இவ்விதம் அமைந்ததாகும்.

கொலை, களவு முதலிய குற்றங்களைச் சபையாரே வழக்குத் தீர்ப்பது அக்கால வழக்கமாகும். இவ்விதத் தீர்ப்புக்களைச் சில கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இக்கோயிலுக்காக தருமத்துக்கு விடப்பட்டிருந்த பசு ஒன்றை ஆண்டநாய்கபிச்சனின் மகனுன மங்கன் என்பவன் களவாடினுன். அதனை அறிந்த ஊராரும், மாகேசுவரர்களும், குலோத்துங்க சோழ பேரிளமைநாட்டு மக்களும், திருநாரையூர்க் கோயில் மண்டபத்திற் கூடினுர்கள். அந்தக்கோயிற் பசுவினின்றுங் கிளைத்த 7 பசுக்களையும் 5-கன்றுகளையும் அம் மங்கனிடத்திலிருந்து திருப்பிக் கோயிலுக்கு ஒப்படைப்பதென்றும், சூலக்குறியைப் பொறிப்பதென்றும் சபையார் தீர்மானித்தனர்.

இக்கோயிலிலுள்ள நாலாவது கல்வெட்டுப் பல்லவ அரசனுன கோப்பெருஞ்சிங்கன் காலத்தைச் சேர்ந்தது. அக்கல்வெட்டின் காலம் கி.பி. 1250. இதன்படி திருப்புலீசுவரமுடையார் கோயிலின் மாகேசுவரர்கள், ஸ்தானத்தார் முதலிய பணிமக்கள் திருநாரையூர்க் கோயில் மாகேசுவரர் முதலியவர்களுக்கு 60 மாநிலத்தை விற்பனை செய்தார்களென்பது தெரிய வருகிறது.



# திருப்பாடல்கள்

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர்

திருச்சிற்றம்பலம்

உரையினில் வந்த பாவ முணர்நோய்க ளும்ம
செயநீங்கு குற்ற முலகில்
வரையினி லாமை செய்த வவைதீரும் வண்ண
மிகவேத்தி நித்த நினைமின்
வரைசிலை யாகவன்று மதின்மூன் றெறித்து
வளர்கங்கு ணங்கை வெருவத்
திரையொலி நஞ்ச முண்ட சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே.

---

பாடிய லூர்திரை சூழ்புகலித் திருஞான சம்பந்தன்
சேடியலும் புகழோங்கு செம்மைத் திருநாரை யூரான்மேல்
பாடிய தண்டமிழ் மாலைபத்தும் பரவித் திரிந்தாக
வாடிய சிந்தையி னூர்க்குநீங்கு மவலக் கடலுனே.

## திருநாவுக்கரசுநாயனர்

வடிகொள் வெண்மழு மானமர் கைகளும்
பொடிகொள் செம்பவ ளம்புரை மேனியும்
நடிகொ ணன்மயில் சேர்திரு நாரையூர்
அடிக டம்வடி வம்ம வழகிதே.

சொல்லானைப் பொருளானைச் சுருதி யானைச்
சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானை
அல்லானைப் பகலானை யரியான் றன்னை
யடியார்கட் கெளியானை யரண்மூன் றெய்த
வில்லானைச் சரம்விசயற் கருள்செய் தானை
வெங்கதிரோன் மாமுனிவர் விரும்பி யேத்தும்
நல்லானைத் தீயாடு நம்பன் றன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டே னானே.

———

நம்பியாண்டார்நம்பியருளிய

## விநாயகர் திருவிரட்டைமணிமாலை

வையகத்தா ரேத்த மதினாரை யூர்மகிழ்ந்து
பொய்யகத்தா ருள்ளம் புகலொழிந்து —கையகத்தோர்
மாங்கனிதன் கொம்பண்டம் பாசமழு மல்குவித்தா
னாங்கனிநஞ் சிந்தையமர் வான்.

காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் இயற்றிய

### க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

முகில்போற் பொழியு மூவர்திரு முறைகண் டெடுக்கச் சோழேசன்
முக்கா லத்தி னியல்புணர்ந்த முத்தர்நம்பி யாண்டார் தாள்
புகழ வங்கே நிவேதித்த பொற்பார் மோத காதியெலாம்
பொருந்தத் துதிக்கை யாலெடுத்துப் புசிக்க வவர்தாம் பின்கேட்க
மகிழைங் கரத்தோன் கனகசபை வாயு திக்கி லிருக்கு தென்றே
வந்தேயருளத் திருமுறையால் வையமெல்லாம் வாழவைக்குந்
திகழு நாரை யூர்க்குமரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வக் குறப்பெண் மணவாளா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

திருச்சிற்றம்பலம்

# Tirunaraiyur The Home Of Sri. Nambi Andar Nambigal

[S. R. Balasubramaniya Ayyar, M. A., L. T.,]

Thirunaraiyur, the Home of Sri Nambi Andar Nambigal is a holy place about eleven miles south-west of Chidambaram on the road to Kattumannarkoil. It is so called because a certain rishi, Narayana by name, who was transformed into a crane by a curse, worshipped god Siva here, and got relieved of the curse.

Nambi Andar Nambigal, is one of the Saiva Saints. He was chiefly responsible for the discovery of the Thevaram Hymns. The Editorship of the first eleven of the famous Twelve Saiva Thirumurais is ascribed to this great Saint of Thirunaraiyur. He is also the author of ten of the forty sacred poetical works compiled as the Eleventh Thirumurai.

*THE RECOVERY OF THE THEVARAM HYMNS:* The Chola ruler Rajarja I (985 A. D.) was one of the greatest of the early imperial cholas. He extended his conquests far and wide including almost the whole of modern Madras Presidency and Mysore and the neighbouring

islands as well; and he laid the foundation for the greater and more brilliant exploits of his worthy son and successor, Rajendra I, the conqueror of the region of Ganges and Kadram. In his time the Chola Empire reached its greatest glory. In keeping with his brilliant achievement in arms, RajaRaja I completed the ground edifice in stone known as the Rajarajeswaram at his capital, Tanjore. He was an ardent follower of the Saivite faith. He belonged to a family devoted to the Lord of Dance (Adavattan) at Chidambaram. He had the surname Sivapada Sekhara and naturally his interest in Saivite canons was very great. Though there is epigraphical evidence making provision for singing Thevaram Hymns even during the Pallava age, the king found that in his days, the Hymns of the three chief Nayanmars were not available and he conceived such a passion for them, that he strained every nerve to secure them. Umapathi Sivacharia who recorded in verse this story of the recovery and redaction of the chief Saivite canons in his work 'Thirumurai Kanda Puranam' calls the King RajaRaja Abhaya Kulasekhara, a devotee of the Thyagesa of Tiruvarur. The King was filled with despair when the search proved futile. Then he heard of the great miracle wrought by the great Saint of Tirunarayur-Nambi-Andar-Nambigal.

It is said that Nambi's father Anandesa Sivachariar, was a priest of the Pollappillaiyar of Tirunarayur in Sonadu (now in South Arcot District). One day the father who had to be absent at a neighbouring village commissioned his son to deputise for him. The boy carried out his father's instructions, and placing the offerings at the feet of Sri Ganesa, prayed to Him. Seeing no response from the deity, the boy was about to knock his head against a stone. Suddenly the God stopped him and accepted all the offerings. Then the boy said that it was late for the school and he feared the teacher would scold him for his late coming and he requested the Lord to teach him lessons. The Lord did so. The next day, the same course was repeated. Lo! The whole world wondered; the miracle reached the ears of the Chola King when he was in strait over the Thevaram Hymns. And the King at once resolved to go to Tirunarayur. So he did, and when he came, he brought large quantities of varied offerings of fruits and cakes. At the request of the king, these huge gifts were offered to the Pillaiyar, and they were accepted. The King was greatly delighted and there-upon made known to Nambi his quest for the Thevaram Hymns of the Trio (The three Saints - Sambandar, Appar, and Sundarar). Nambi prayed to his Pillaiyar, and He revealed to His disciple that they would be found deposited in

a room in the back side of the Hall of the "Lord of Dance" at Chidambaram, and told the men of Vedic lore what had been revealed to them. The temple authorities then declared that the room would open only if those who set the seal came back. Upon this the King conducted a festival for the Lord Nataraja, took the three Nayanmars in procession round the temple and stationed them in front of the room to the west of the Hall of Dance of the Lord. The seals were noticed and the sealed room was opened. A heap of cadjan leaves swallowed mostly by white-ants was found. They poured oil over the heap and recoverd the surviving leaves. The King's distress was beyond words, when he found such a large scale destruction of the Holy Texts. Then a divine voice from 'On High' told that there were in it whatever was needed for his age and this gave the King some relief. Then Nambi had them collected and arranged. The Hymns of the Trio formed the first seven out of the twelve books of the canon of the Saivites.

It was glorious day in the history of Chidambaram a day only next in importance to that on which the Nataraja Cult was instituted and the Lord did His Dance Divine to grant grace to his devotees. Nambi's redaction of the Saivite canons made this place the pivot of the

whole religious system How proud was Sivapada sekhhara! How large this place loomed in the life of the princes and peoples of the land ! !

THE INSCRIPTIONS:- Though the temple gained celebrity by its association with Nambi-Andar Nambigal, its Antiquity is unquestioned. The temple has been the theme of some of the Hymn of the Saivite Saints, Appar and Sambandar who flourished in the seventh century A.D. Appar the contemporary of Mahendravarma Pallava calls the place Naraiyur - the good city Naraiyur-Nannagar.

In this place, there are two shrines to Siva, one is called the Mulasthana and the other Soundareswara. Of these the former which is situated to the north of the Soundareswara Shrine is the older and it is this other shrine that was the recepient of the early gifts as evidenced by the few records - only four - that have come down to us. The earlier structure of the Mulasthana and the epigraphical records if any have been unfourtunately lost to us. The main shrine as it is to-day should be ascribed to the Eleventh Century A.D.- the period of I and his successors.

According to the inscriptions, Tirunaraiyur, was a suburb or hamlet of Viranarayana Chadhurvedimangalam (a big self-goveriung village known as a 'Taniyur') which was the ancient name of the present area covered by the villages of Udayarkudi Lalpet, Kattumannarkoil and Tirunaraiyur. And this Taniyur- resemling roughly a municipality-was in Vadaharai-Virutharaja-Bhayan kara-Valanadu.

These selfgoverning local bodies enjoyed vast powers of administration like the receiving and making of grants, the buying and selling of lands, the collection of revenue and spending of taxes, the exercise of criminal justice etc.

An inscription of the 14th year of a certain Klotunga Chola Deva, (unidentified-perhaps I, A. D. 1084 or II 1147 A. D. refers to a gift of three kasu by a lady to certain individuals for burning a twilight - lamp in the temple of Mulasthana Udaiyar.

Another incription relates to the Third year of Parakesari Varman Vikrama Chola Deva (C. 1121. A.D.). It registers a revision of the grant of land for providing 540 kalams of paddy yearly to the God Sri Kailasam Udaya Mahadeva Tiruvoypaddy Alwar as the original grant was found inadequate to meet the expenses. Tiruvoypadi

is perhaps the village of Tiru - aippadi on the south bank of the Coleroon. Gifts of one temple are sometimes registered on the temple walls of other villages and this is perhaps one of such cases.

The even tenor of the normal village life was sometimes disturbed b y cases of foreign invasion, official oppression, cases of theft and other abnormal activities. These are some times reflected in inscriptions, and such cases ought to be placed in the proper perspective to realise the otherwise even flow of the life of the people. It is reported that Mangan, the son of Anda Nayaka Pichan had misappropriated a cow left for the temple charity in his charge. There upon the Village Assembly, the Maheswaras and the residents of the Klothunga - Solapperilamai - nadu met in the temple of Tirunarayur and ordered confiscation to the temple of the livestock of seven cows and five calves which has multiplied from that cow and their branding with sulam.

An Inscription of 1250 A. D. of the time of the later Pallava Chief Kopperunjinga mentions the sale of 60 ma of land for 12000 kasu to the Maheswaras, managers, and temple servants including the accountants of the temple of Mulasthanam Udaiyar in Tirunarayur by the corres-

ponding officials and servants of the temple of Udaiyar Tiruppuleesvaram Udaiyar (of Erukkatampuliur?).

These are the very scanty records that we have about this place. But Tirunaraiyur is, since the days of Rajaraja I, the Home of Nambi Andar Nambigal and Pollapillayar whose names are indissolubly associated in the Tamil-land with the romanatic episode of the recovery of the Thevaram Hymns.

